5th March 1958]

SRI S. B. ADITYAN : பதில் வந்தது. இது மத்திய சர்க்காரில் கேட்கவேண்டுமே ஒழிய நமது நிதி அமைச்சர் அவர்களிடத்தில் எப்படி கேட்பது என்று கேட்டிருந்தது.

MR. SPEAKER : அதில் தவறு ஒன்றுமில்லேயே.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி கேட்கவேண்டிய இடத்தில் கேட்டால் பதில் கிடைக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Repairs to tanks*

* 212 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the amount spent to repair the tanks damaged by the overflow of water in 1956–57 in the Bhavani taluk, Coimbatore district; and

(*b*) the amount spent to repair the channel connecting them?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The exact amount spent in carrying out repairs to the tanks damaged by the overflow of water in 1956–57 in Bhavani taluk is Rs. 15,588.

(*b*) The amount spent on repairing the channels connecting them is Rs. 1,314.

* SRI P. G. MANICKAM : ஸார், இதில் குறிக்கப்பட்டிருக்கும் வாய்க்கால் மூலம் மழை பெய்யும் காலங்களில் தண்ணீர் கிடைக்கிறது. மேலும் அங்கிருக்கின்ற ஏழு குளங்களுக்கு மேட்டூர் அணைக்கட்டிலிருந்தும் லோயர் பவானி அணைக்கட்டிலிருந்தும் தண்ணீர் விட முடியும். ஆகவே இதற்கு ஒரு திட்டத்தை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருவார்களா என்று கேட்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்த ஏழு குளங்கள் எதெல்லாம் என்று தெரியவில்லை. ஆகவே இதற்கு தனிக்கேள்வி போடும்படி கேட்கிறேன்.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958–59—*cont.*

MR. SPEAKER : இன்றைய தினமும் பட்ஜெட்டின்மீது பொது விவாதம் நடைபெறும். இன்றைக்கு பேசுவதற்கு 35 அங்கத்தினர்கள் பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஆகவே ஒவ்வொரு அங்கத்தினரும் 10 நிமிஷங்கள் தான் பேசவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நான் 8-வது நிமிஷத்தில் மணியடிக்கிறேன். அதன் பின் இரண்டு நிமிஷங்கள் கழித்து 10-வது நிமிஷத்தில் முடித்துக்கொள்ளவேண்டும் என்று எல்லா அங்கத்தினர்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

*SRI P. P. M. T. PONNUSWAMY : மதிப்பிற்குறிய சபாநாயகர் அவர்களே உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் என்ற பாரதியாரின் வாக்குப்படி கனம் நிதி மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த வரவு செலவுத் திட்டத்தை நன்றியுடன் ஒப்புக் கொள்கின்ற நேரத்தில், சென்ற ஒரு வருஷத்திய அனுபவத்தைக் கொண்டு சில யோசனைகளை சமர்ப்பிக்க விரும்புகிறேன். இங்கு பல நண்பர்கள் பல விஷயங்களைப்பற்றி பேசினார்கள். நான் சுருக்கமாக சில விஷயங்களை மட்டும் சொல்லுகிறேன். மின்சாரம் சம்பந்தமாக, கிராம மக்களுக்கு மின்சார பம்பு செட்டுகள் வைக்கவேண்டும் என்று நாம் பிரசாரம் செய்தோம். அதை அவர்கள் ஏற்படுத்தும்பொழுது அவர்களுக்கு இதில்